6th February 1959] [Mr. Chairman]

5. Sri Mohamed Raza Khan.
6. Sri V. M. Surendram.
7. Sri T. S. Sankaranarayana Pillai.
8. Sri V. S. Balasundaram.
9. Srimathi Saraswathy Pandurangam.

*Committee on Government Assurances.*

1. Dr. A. Lakshmanaswami Mudaliar.
2. Sri K. Balasubramanya Ayyar.
3. Sri V. V. Ramaswami.
4. Sri M. Subramania Karayalar.
5. Srimathi K. B. Sundarambal.

Under rule 174 (1), I have nominated Dr. A. Lakshmanaswami Mudaliar to be the Chairman of the Committee on Government Assurances.

## III.—GOVERNMENT BUSINESS.

### DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS.

MR. CHAIRMAN : Now we shall take up the discussion on the Governor's Address.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : மாண்புமிக்க மன்றத் தலைவர் அவர்களே, கனம் கவர்னர் பெருமகனார் 1959-ம் ஆண்டு பிப்ரவரி திங்கள் நான்காம் நாள் சட்டமன்ற கூட்டு அவையில் ஆற்றிய பேர் உரைக்கு சட்டமன்ற அங்கத்தினர்களின் சார்பில் பணிவான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளும் தீர்மானத்தை முன் மொழிகிறேன்.

Sir, I move the following motion standing in my name :—

'That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Council thank him for the Address [a] delivered to the Members of the Legislature on the 4th February 1959 '.

SRI V. M. SURENDRAM : I second the motion, Sir.

MR. CHAIRMAN : Motion moved—

'That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Council thank him for the Address [a] delivered to the Members of the Legislature on the 4th February 1959.'

The hon. Member may speak on the motion. The amendment will be moved afterwards.

*VIDWAN T. MUTHUKANNAPPAN : மன்றத் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமகனார் அவர்களுக்கு நன்றி செலுத்துவதில் நான் உண்மையில் பெருமகிழ்ச்சி அடைகிறேன். அவர் உரையை உட்புகுந்து பார்ப்பதற்கு முன்னே கவர்னர் பெருமகனாரைப் பற்றிய சில செய்திகளைக் கூற விரும்புகிறேன்.

---

[a] Printed as Appendix VI on pages 67–70 infra.

முன்னோர் காலத்தில் அகத்திய முனிவர் வட நாட்டிலிருந்து தென்னாட்டுக்கு வந்து தமிழ்த் தொண்டு செய்தார் என்று பண்டைப் புராணங்கள் பகர்கின்றன. அது உண்மையோ பொய்யோ நமக்குக் கவலை இல்லை. அண்மையில் சென்ற $1\frac{1}{2}$ ஆண்டுக்கு முன்னர் வடகிழக்குப் பகுதியிலிருந்து வந்து தமிழ் நாட்டு மக்களுக்குத் தொண்டு செய்து வருகிற கவர்னர் பெருமகனார் நம்முடைய பாராட்டுக்குரியவர். அது போற்றத்தக்க செயல்தான். அவர் உருவப் பொருத்தமும் ஏற்ற வகையில் அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது. குறுமுனிவர் என்று அகத்தியருக்குப் பெயர். நமது கவர்னர் பெருமகனாரின் உருவமும் அப்படியே அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

மக்கள் துன்பமும் துயரமும், வேதனையும் சோதனையும் அடைகின்ற இடங்களுக்கெல்லாம் நமது கவர்னர் பெருமகனார் விரைந்து சென்று ' அஞ்சேல் ' என்று ஆறுதல் கூறி வருகிறார். இங்கே அவரது பெயர் பொருத்தத்தை விளக்க விரும்புகிறேன். காப்புக் கடவுள் மகாவிஷ்ணு—ராம். இவர் பெயரும் விஷ்ணுராம்தான். ஆற்றலும், அறிவும், பண்பும் படைத்தவர்களுக்கு மேதை என்ற பெயர் உண்டு. நமது கவர்னர் பெருமகனாரின் பெயரும் மேதைதான். எனவே விஷ்ணுராம் மேதை என்ற பெயர் எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது !

SRI K. BALASUBRAMANYA AYYAR : மேதைக்கும் மேதிக்கும் சம்பந்தம் இல்லை.

SRI A. GAJAPATHY NAYAGAR : மேதைத் தன்மையுடையவர் மேதி என்று வருகிறது.

* VIDWAN T. MUTHUKANNAPPAN : ஆங்கிலத்தில் மேதி Medhi என்று வருவது பெயர்ச் சொல்லாகையால் மேதை என்றும் வழங்கலாம். அது தவறில்லை என்று கனம் அங்கத்தினருக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

துரதிருஷ்டவசமாகப் பருவநிலை நாம் எதிர்பார்த்த அளவு வெற்றிகரமாக இல்லையென்று தோன்றுகிறது. பருவநிலை பரவாயில்லை என்றாலும், திருநெல்வேலி, ராமநாதபுரம், வடஆற்காடு மாவட்டங்களில் விளைவு பொய்த்துப்போயிருக்கிறது. அந்த இடங்களில் எல்லாம் வரி வஜா செய்ய சர்க்கார் முன் வருவார்கள் என்று நினைக்கிறேன். மேலும் நவம்பர் மாதத்தில் இச்சிக்கலை ஆராய்ந்த தேசிய வளர்ச்சிக் கவுன்சில் உணவு தானிய மொத்த வாணிபம் முழுவதையும் அரசாங்கமே எடுத்து நடத்த வேண்டுமென்று ஆலோசனை கூறியுள்ளது. இதைப்பற்றி அரசாங்கம் மிக நுணுக்கமாக ஆராய்ந்து தக்க முறையில் காரியங்களை மேற்கொள்ளும் என்று நினைக்கிறேன்.

உணவுப் பொருள்களின் விலை உயர்ந்துகொண்டே போகிறது. இதற்கெல்லாம் காரணம் மக்கள் கூட்டத்தில் இன்றைய நிலையில் பேராசைக்காரர்கள் கள்ள வாணிபம் செய்து கொள்ளை லாபம் அடிக்கும் நோக்கம் உடையவர்கள் பெருகி இருப்பதுதான். இதை எண்ண உள்ளத்தில் வேதனை மூள்கிறது. இந்தச் சமயத்தில் என் உள்ளம் பட்டினப் பாலை பாடிய காலத்திற்குத்தாவிச் செல்கிறது. பட்டினப் பாலையில் நம் நாட்டு வணிகர்கள் கையாண்ட வாணிப முறை மிக நன்றாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

அக்காலத்து வணிகர்கள் தாங்கள் விற்கும் பொருள்களின் உண்மையான விலையைக் கூறியே விற்றார்கள். அவர்கள் பெறும் பொருளின் அளவுக்குக் குறையாமலும், விற்கப்படும் பொருளின் அளவினைக் குறைக்காமலும், கூட்டாமலும் சரியாகவே விற்று வந்தார்கள் என்று சொல்லப்படுகிறது.

"கொள்வதூ உம் மிகை கொளாது கொடுப்பதூ உம் குறைகொடாது
பல்பண்டம் பகர்ந்துவீசி "

என்று பட்டினப் பாலையில் சொல்லப்படுகிறது.

அப்படிப்பட்ட நாட்டில் இன்றையதினம் கொள்ளை லாபத்திலே கருத்துக் கொண்டு கள்ள வியாபாரம் செய்யப் புகுபவர்களைக் கண்டால் நாம் வருந்தாமல் இருக்க முடியவில்லை. இது உண்மையில் வேதனை தரும் செய்தியாகும். இந்த நிலையைச் சமாளிக்க அரசாங்கமே கூட்டுறவு இயக்கங்களின் மூலமும், அங்கீகரிக்கப்பட்ட வியாபாரிகள் வாயிலாகவும் 2 லட்சம் டன் அரிசி வாங்க முடிவு செய்திருப்பதாகக் கவர்னர் பெருமகனாரின் உரையிலிருந்து தெரிகிறது. இதைப்பற்றி சர்க்கார் மிகுந்த விழிப்போடு இருக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவசியமான காலங்களில் நியாய விலைக் கடைகளின் மூலம் மக்களுக்கு உணவுப் பொருள் வழங்க ஏற்பாடு செய்திருப்பது மிகவும் பாராட்டவேண்டியதுதான். இந்த நியாய விலைக் கடைகளை நினைக்கிறபோது, கடந்த பல ஆண்டுகளுக்கு முன்பு நியாய விலைக் கடைகள் (ரேஷன் முறை) அமுலில் இருந்த காலம் எனக்கு நினைவுக்கு வருகிறது. அப்போது கொள்ளை லாபமும், கள்ள வாணிகமும் அளவுக்கு மீறித் தாண்டவம் ஆடின. அதனால் மக்கள் அடைந்த வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. அத்தகைய தீய நிகழ்ச்சிகள் நேராவண்ணம் பார்த்துக் கொள்ளவேண்டுமென்று அரசாங்கத்தை வேண்டிக்கொள்கிறேன்.

உணவுப் பொருளின் அளவை நாம் இன்னும் பன்மடங்கு பெருக்கும் வகையில் தொடர்ந்து முயலவேண்டும் என்கிற குறிப்பைக் கவர்னர் பெருமகனார் சுட்டிக்காட்டியுள்ளார். விளைவை இன்னும் பன்மடங்கு பெருக்க வேண்டுமானால், குளம், குட்டை, கால்வாய் போன்றவைகள் சிறந்த முறையில் செப்பனிடப்படவேண்டும். இத்தகைய சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களை மேற்கொண்டு நன்கு பாசன முறையை அபிவிருத்தி செய்தால், உண்மையில் விளைவு மேலும் அதிகமாகும் என்று சொல்ல விரும்புகிறேன்.

நிலச் சீர்திருத்தப் பிரச்னை—நிலவுடைமைக்கு வரம்பு கட்டும் பிரச்சனைகள் சம்பந்தமாக அரசாங்கம் நடவடிக்கை மேற்கொள்ளப் போகிறார்கள். உண்மையில் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாகச் சாகுபடி செய்தால், மிகவும் லாபகரமாகத்தான் இருக்கும். ஜப்பான், செக்கோஸ்லேவாகியா போன்ற நாடுகள் எல்லாம் இக்கூட்டுறவு முறையைப் பயன்படுத்துவதன் காரணமாகத் தான் அவை விவசாயத்தில் வேகமாக முன்னேறியிருக்கின்றன. ஆனால் இப்பிரச்னை உண்மையிலேயே கொந்தளிக்கும் குழப்பக் கடல் ; தீர்க்க முடியாத சிக்கல்களின் சிகரம். ஆதலால், இவற்றை அரசாங்கம் நிதானத்துடனும், விழிப்புணர்ச்சியுடனும் நுணுக்கமாகவும் அணுக வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தைப்பற்றிக் கவர்னர் பெருமகனார் "இப்போக்கை ஒட்டிப் பார்த்தால், திட்டத்தில் கண்டுள்ள பணிகளை நாம் குறிப்பிட்ட காலத்தில் நிறைவேற்றுவதோடல்லாமல் அதற்கு மேலும் சில திட்டங்களை மேற்கொள்ள முடியும் என்னும் நம்பிக்கையும் ஏற்படுகிறது" என்று குறிப்பிடுகிறார். இது நமக்கு ஆக்கமும், ஊக்கமும் தருவதாக இருக்கிறதென்று மகிழ்ச்சி அடைகிறேன். இத்திட்டங்கள் நல்ல முறையில் நிறைவேறினால், பாலைவனம் எல்லாம் சோலைவனங்களாக மாறும் என்பதில் ஐயமில்லை. பிறகு நீர்வளமும், நிலவளமும், கலை வளமும் மற்ற பல வளமும் நிரம்பப்பெற்று நம் நாடு ஓங்கி உயர்ந்து சிறந்து விளங்கும் என்று எதிர்பார்க்கிறேன். 3-20 p.m.

வட்டார வளர்ச்சிபற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். வட்டார அபிவிருத்தியில் அந்த வட்டாரத்தைச் சேர்ந்தவர்கள் அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஆகும் செலவில் 50 சத விகிதம் கொடுக்கவேண்டும் என்று இருக்கிறது. பின் தங்கிய வகுப்பார்கள்—குறிப்பாக மீனவர்கள் போன்ற மக்கள்—வசிக்கக்கூடிய வட்டாரங்களில் இந்த விதிக்கு விலக்கு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். குறிப்பாக மீனவ மக்களுக்குச் சலுகை அளிக்கவேண்டுமென்று கூறிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் காலை முதல் மாலை வரையில் நெற்றி வியர்வை கீழே விழ வருந்திப் பாடுபட்டாலும், சராசரி ஒரு நாளைக்கு 8 அணா முதல் 10 அணாவுக்கு மேல் வரும்படி இராது. அவர்கள் பகுதி முன்னேற வேண்டுமானால், ஆகும் செலவில் அவர்களும் பாதி கொடுக்கவேண்டுமென்றால், அவர்களது வட்டாரம் எப்போது எப்படி அபிவிருத்தி அடையும்? உடல் உழைப்பாவது தரவேண்டு

மென்று கோருகிறார்கள். நாள் முழுவதும் உடல் வருந்திப் பாடுபட்டு உழைத்துத் திரும்பியவர்களை மேலும் உடல் உழைப்பின் மூலம் உதவவேண்டு மென்றால் அது அவர்களைச் சித்திரவதை செய்வதாகும் என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். எனவே, அத்தகைய மக்களுக்கும் ஹரிஜனங் களுக்குக் காட்டிவருகிற சலுகைகளை அரசாங்கம் காட்டவேண்டுமென்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சமுதாய வளர்ச்சித் திட்டம். வருங்காலத்தில் ஒவ் வொரு பஞ்சாயத்து யூனியனிலும் வட்டார அபிவிருத்தித் திட்ட முறை செயல்படும். இம்முறை மக்கள் எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள் என் பதை உணர்ந்துகொள்வதற்குச் சிறந்த வாய்ப்பு அளிக்கும். தங்களைத் தாங்களே ஆண்டுகொள்வதற்கு இது சாதனமாக இருக்கிறதென்று கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

பஞ்சாயத்து யூனியன் அமைப்பு முறையால் குடியாட்சித் தத்துவம் நம் ராஜ்யத்தில் நன்றாகச் செயல்படப்போகிறதென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நமது தேசத் தந்தை உலகம் போற்றும் உத்தமர் காந்தி யடிகள் நீண்ட நாட்களாகக் கண்டு வந்த கனவு இம்முறையால் நனவாகப் பரிணமிக்கப்போகிறது. அதாவது அவர் கண்ட இராமராஜ்யம்—கிராம ராஜ்யம்—ஏற்பட்டு மக்கள் எல்லா நலன்களும் பெற்றுச் சிறப்புற வாழப் போகிறார்கள்.

"நம்முடைய பாசனத் திட்டங்களும், மின்சாரத் திட்டங்களும் திருப்தி அளிக்கும் வகையில் முன்னேறி வருகின்றன" என்று கவர்னர் குறிப் பிட்டுள்ளார். இவைகள் எல்லாம் சிறந்த முறையில் செயல்பட்டால், நம் நாட்டில் பஞ்சம் கொஞ்சமும் இன்றி அஞ்சி ஓடி ஒளியும். மேலும், மேற்கு நோக்கிப் பாயும் பரம்பிக்குளம், ஆனை மலைப் பகுதிகளில் ஓடும் ஆறுகளின் நீரைப் பகிர்ந்துகொள்ளும் முறையில் கேரள அரசாங்கத் தோடு நடத்திய பேச்சுவார்த்தை வெற்றிகரமாக முடிந்ததுபற்றிக் குறிப்பிட்டுள் ளார். அது உண்மையில் மாபெரும் வெற்றி. இந்நிகழ்ச்சியால் நம் உள்ளத்திலும் மகிழ்ச்சியாறு பெருக்கெடுத்து, உடல் முழுவதும் பெருகிப் பாய்ந்து புளகாங்கிதம் கொள்ளச் செய்கிறது. மேலும், தாமோதர் பள்ளத்தாக்கு அணை, ஹெர்குட், கோசி அணை போன்றவை நம் நாட்டில் இல்லையே என்ற நிலை மாறி நமக்கும் அத்தகைய நீர்ப்பாசன வசதி கிடைக் க்கும் என்று பெருமை கொள்ளச் செய்கிறது. இத்திட்டத்திற்கு 30 கோடி ரூபாய் செலவாகும் என்று தெரிகிறது. இப்படி 30 கோடி ரூபாய் செல வானாலும் கூட இதனால் கோயமுத்தூர் மாவட்டத்தில் 2½ லட்சம் ஏக்கரா பாசன வசதி பெறும் என்றும், ஒரு லட்சம் கிலோவாட்ஸ் மின்சாரம் கிடைக் கும் என்றும் தெரிகிறது. இத்திட்டத்தின் ஆரம்ப வேலைகள் தொடங்கப் பட்டுவிட்டன என்ற செய்தி நம் எல்லோருக்கும் மட்டற்ற மகிழ்ச்சி தருவ தாகும். இவற்றின் மூலம் நாட்டுக்கு ஆக்கமும், ஊக்கமும் மேலும் பெருக வாய்ப்பு இருக்கிறது.

ஏற்கெனவே பூர்த்தியாகிவிட்ட பெரியாறு பாசனத் திட்டத்தினால் இவ் வாண்டு மின்சார வெட்டுப் பெரும்பாலும் இருக்காது என்று கவர்னர் பெரு மான் குறிப்பிட்டுள்ளார். இது மகிழ்ச்சிக்குரியதாகும். கோடை காலத்தில் வெந்து நொந்து புழுங்கிக்கொண்டிருக்கும் நிலை இல்லாமல் இனி மின் விசிறி தொடர்ந்து ஓடிக்கொண்டிருக்கும் என்பது இன்பம் கொடுக்கிறது.

குந்தா திட்டம் ஒரு மகத்தான திட்டம். இத்திட்டம் நிறைவேறினால் எல்லா வகைகளிலும் பல நன்மைகள் ஏற்படும். அதுவும் திருப்திகர மாக முன்னேறி வருகிறது என்று கவர்னர் குறிப்பிட்டுள்ளார். மேலும் "தற்போது நடக்கும் வேலை வேகத்தின்படி பார்த்தால் அடுத்த ஆண்டின் தொடக்கத்தில், முதல் மின்சக்தி உற்பத்தி இயந்திரம் வேலையைத் தொடங் கலாம்" என்று கவர்னர் பெருமகனார் குறிப்பிட்டுள்ளார். ஆகவே, நடப்பு ஆண்டில் 1,300 கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கப்படும். இத் துடன் மொத்தம் வசதிபெற்ற கிராமங்களின் எண்ணிக்கை 8,000 ஆகப் பெருகும் என்கிற செய்தியை நினைக்கிறபோது, எல்லா மக்களுக்கும் பேரானந்தம் பெருக்கெடுக்கும்.

6th February 1959] [Vidwan T. Muthukannappan]

மூலை முடுக்குகளிலும் சந்துபொந்துகளிலும் உள்ள கிராமங்களிலும் இன்றையதினம் போய்ப் பார்த்தால், மின்சார வளர்ச்சி எத்தகையது என்பது புலனாகும். வீதிகளும், தெருக்களும் இருண்டு கிடந்த மூலை முடுக்குகளும் ஜகஜ்ஜோதியாக விளங்குகின்றன. இரவு எல்லாம் பகலாக மாறி இருக்கும் நிலை வியக்கத்தக்கது. 6 மணி அடித்தவுடன் அஞ்சி வீட்டுக்குள் அடங்கிக் கிடந்த குழந்தைகள் எல்லாம் இப்போது விளக்கு அடியில் பேரானந்தமாகத் துள்ளிக் குதித்து விளையாடிக்கொண்டிருக்கிற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கிறது! இதற்கெல்லாம் காரண மான மின்சார அமைச்சர் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். மின்சார அமைச்சர் அவர்கள் மின் வேகத்தில் இத்திட்டங்களை நிறைவேற்றி வருவதற்காக அவர்களை முழுமனதுடன் பாராட்டிப் புகழவேண்டும்.

ஏனைய ராஜ்யங்களைவிட நம்முடைய ராஜ்யம்தான் மின் துறையில் பன்மடங்கு முன்னேறியிருக்கிறதென்பதைப் பார்க்கிறபோது, பெருமகிழ்ச்சி கொள்ளத் தோன்றுகிறது.

அடுத்தபடியாக, தொழில் துறையில் நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டம் எண்ணியாங்கு முன்னேறியிருக்கிறது என்று கூறியிருக்கிறார். 2½ லட்சம் கிலோவாட்ஸ் மின்சாரம் உற்பத்தி செய்யும் தெர்மல் நிலையம் ஒன்றை அமைப்பதற்காக ரஷ்ய அரசாங்கத்துடன் நடத்திய பேச்சு வார்த்தைகள் முடிந்து ஆரம்ப வேலைகள் நடந்துகொண்டிருக்கின்றன என்று அவர் குறிப்பிட்டுள்ளது பாராட்டலுக்குரியதாகும். மேலும், எரு உற்பத்தி செய்யும் பொறி நிலையம் அமைப்பதற்காக ஒப்பந்த விவரங்கள் பரிசீலனை யில் இருக்கின்றன. இதுவும் முடிந்தால் நல்ல உரம், சிறந்த உரம் கிடைக்கும். இதனால் நமது நாட்டின் வேளாண்மை பெருகி மக்கள் எல்லா வளங்களும் இனிது பெற்று நல்வாழ்வு வாழ்வார்கள் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

மேலும், தோண்டி எடுக்கப்பட்ட பழுப்பு நிலக்கரியைக் கட்டிகளாக வார்ப்ப தற்கும், பின்னும் அவைகளை எரியும் கரிப்பொருளாக மாற்றுவதற்கும் வேண்டிய பொறிகளை அமைப்பதில் வெளிநாட்டு நாணய மாற்றத்தில் ஏற் பட்ட நெருக்கடி காரணமாக இருந்த தடைகள் இப்போது இல்லை, நடப்பு திட்டகாலத்திலேயே அவ்வேலை தொடங்கும் என்ற குறிப்பு பெருமகிழ்ச்சி கொள்வதற்குரியது.

அடுத்தபடியாக, கல்வி வளர்ச்சியைப்பற்றி நினைக்கிறபோது, தமிழ் நாட்டில் நாம் பிறந்திருப்பதையே பெருமையாகக் கொள்ளவேண்டும். கல்வியிலே நாம் ஏனைய ராஜ்யங்களுக்கு வழிகாட்டியாக—முன்னோடியாக— இருக்கிறோம் என்று சொல்லலாம்.

சட்டமன்றக் கல்விக் குழுவின் சிபார்சுகளை ஏற்று அவைகளை நமது அர சாங்கம் திறம்படச் செயல்படுத்தி வருகிறது. அம்முறையைப் பின்பற்றி இது வரையில் தொடக்கப் பள்ளிகளில் மூன்றாம் வகுப்பிலும், 8-ம் வகுப்பிலும் பாடபோதனை மேற்கொள்ளப்பட்டன. அடுத்து வரும் ஆண்டுகளில் ஏனைய வகுப்புகளுக்கும் இம்முறை படிப்படியாக மேற்கொள்ளப்பட்டு முன்னேற்றம் அடையும்.

இக்கல்வி முறையில் இன்னொரு குறிப்பிடத்தக்க சிறந்த செய்தி இருக் கிறது. முன்பு எஸ்.எஸ்.எல்.ஸி. படிப்பு முடிய 11 ஆண்டுகள் பிடித்தன. புதிய திட்டப்படி அதே படிப்பு 10 ஆண்டுகளிலேயே பூர்த்தியாகிறது. இது மெச்சத்தக்க மாறுதல். 150 நாட்களை 200 நாட்களாகச் செய்து ஐந்து மணி வீதம், அதாவது $200 \times 5 \times 4 = 4,000$ நாலாயிரம், மணி நேரத்தில் எஸ்.எஸ்.எல்.ஸி-க்குரிய பாடங்களைச் சிறந்த முறையில் சொல்லிக் கொடுக்க வழிவகை செய்திருக்கிறார்கள். இது பெரிதும் வரவேற்கத்தக்க திட்டம் என்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இத்தனை நாளும் பிற்பட்ட மக்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பல கல்விச் சலுகைகளை அளித்தும் கூட அவர்கள் பெரிதும் முன்னேறாமலேயே இருந்து வந்தார்கள். அதற்குச் சரியான காரணம் என்ன ? அது இப் போதுதான் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. வறுமைதான் இதற்கெல்லாம் மூலகாரணம். பசியால் மாணவர்கள் வேதனை அடைந்து வந்தார்கள்.

உணவு இல்லாத நிலையில் மாணவர்கள் கூனிய முதுகும், குழி விழுந்த கண்ணும், சுண்டிச் சுருங்கிய முகமும் கொண்டு வகுப்பு அறையில் ஒடுங்கிக் கிடந்த நிலையைக் கண்டால் மனம் வேதனைக் கடலில் தத்தளிக்கிறது. இப்பரிதாபக் காட்சியைக் காணும்போதெல்லாம் மனம் நெக்குருகும். பகல் உணவு அளிக்கவேண்டுமென்று அரசாங்கம் இப்போது கொண்டு வந்திருக்கும் திட்டப்படி ஏழை மாணவர்கள் எல்லோரும் வயிறார உண்டு, மகிழ்ந்து ஊக்கத்தோடும், ஆக்கத்தோடும் கல்வி பயில்கிறார்கள் என்பதை நினைக்கிறபோது, மட்டற்ற மகிழ்ச்சி பெருகுகிறது. இனி ஏழை மக்கள் எல்லாம் நன்கு கற்று உயர்நிலை அடைந்து ஏழை பணக்காரன் என்ற நிலை மாறி சரிநிகர் சமானமாக இந்நாட்டில் வாழப்போகிறார்கள், வாழ்ந்து சிறந்து வளம் பெறப் போகிறார்கள் என்ற மகிழ்ச்சி நமக்குப் பெருகுகிறது. இந்தச் சிறப்பு மிக்கத் திட்டத்தை நமது நாட்டுப் பிரதமர்—மனிதர் குல மாணிக்கம்—ஜவஹர்லால் நேரு வானளாவப் புகழ்ந்திருக்கிறார். இத்திட்டம் நாட்டுக்கு—ஏன் உலகத்திற்கே— ஓர் புதுமை என்று கூறலாம். இத்தகைய செயற்கரிய காரியங்களைச் செய்து புகழ் தேடும் கனம் கல்வி அமைச்சர் அவர்களையும், கல்வித் துறை இயக்குனர் அவர்களையும் எவ்வளவு போற்றிப் புகழ்ந்தாலும் தகும். மேலும்
3-30 p.m. சில மாதங்களாகப் பள்ளிச் சிறு சேமிப்புத் திட்டம் என்ற உயர்ந்த ஒரு திட்டத்தை நம் தமிழ் நாட்டில் மேற்கொண்டுவருகிறார்கள். இந்தத் திட்டத்தில், பொது மக்கள் பள்ளிகளுக்குப் பணமாகவோ பொருளாகவோ தாராளமாக வாரி வாரிக் கொடுத்துப் பள்ளிகளுக்கு ஆக்கம் காட்டி வருகிறார்கள். இந்தத் திட்டத்தில் நமக்குப் பொதுமக்களிடமிருந்து பேராதரவு கிடைத்திருக்கிறது. "இல்லை" என்று வருவோருக்கு "இல்லை" என்று உரைக்காத நல்ல வள்ளல்கள் மரபில் வந்தவர்கள் அல்லவா நம் தமிழ் மக்கள்? நமது தமிழ் மக்கள் இத்திட்டத்திற்குத் தாராளமாக நன்கொடை அளிக்கிறார்கள். இந்த இரண்டு திட்டங்களும் தமிழ் நாட்டிற்குச் சிறந்ததோர் பெருமையைத் தந்திருக்கிறது. இராஜ்யத்தில் கல்வி இவ்வாறு அபிவிருத்தி அடைவதற்குக் காரண கர்த்தர்களாக இருக்கும் கல்வி இலாகா அமைச்சரையும் இயக்குநரையும் மறுமுறையும் போற்றிப் புகழத்தான் வேண்டும். கனம் கல்வி அமைச்சர் தமிழ் நாட்டின் நிதி நிலையையும் மதி நிலையையும் ஒருங்கே தாங்கி வருங்காலத் தமிழர்களின் கதியையே நிர்ணயிக்கக் காத்திருக்கிறார். அத்தகைய கனம் கல்வி அமைச்சர் அவர்களுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன்.

மேலும், தமிழ் மொழி அரசியல் மொழியாகி விட்டது. தமிழன்னை பண்டுபோல் அரியாசனத்தில் வீறுபட அமர்ந்திருக்கிறார்கள். இதை நினைக்கிறபோது, நான் உண்மையிலேயே பெருமகிழ்ச்சி அடைகிறேன். ஆட்சியாளர்கள் அரிய தமிழுக்கு எவ்வளவோ சிறப்புச் செய்திருக்கிறார்கள். ஆட்சிச் சொல் அகராதி வெளியிட்டிருக்கிறார்கள். கலைச் சொற்கள் வெளியிட்டு வருகிறார்கள். மேலும், தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் மூலம் "கலைக் களஞ்சியம்" போன்ற சிறந்த நூல்கள் வரத் துணை புரிகிறார்கள். 1,200 கிளை அலுவலகங்களில் தமிழ் மொழி செயல்பட்டு வருகிறது. அண்மையிலிருந்து (தமிழ் டைப்பிஸ்டுகள்) கையச்சு எழுத்தாளர்கள் பயிற்றுவிக்கப்பட்டு வருகிறார்கள். கூடியவிரைவில் நம் தமிழ் நாட்டில் தமிழ் அன்னை களிநடம் புரியப்போகிறாள் என்று நினைக்கிறபோது, நமக்கு அது பெருமகிழ்ச்சியைத்தான் அளிக்கிறது. மேலும், சட்ட மன்றத்தில் நேற்று முதல் தமிழ் மணம் கமழ ஆரம்பித்திருப்பது குறித்து நான் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். (வினாக்கள் தமிழிலும் தரப்படுகின்றன.)

இந்தச் சமயத்தில், தொடக்கப் பள்ளிகள் மாணவர்களிடமிருந்து சம்பளம் வாங்கக் கூடாது என்று அண்மையில் வெளியான செய்திபற்றிய கருத்துப் பரவலாக நடமாடிக்கொண்டிருப்பது கனம் அங்கத்தினர்களுக்குத் தெரிந்திருக்கலாம். உண்மையிலேயே, அரசாங்கம் தொடக்கப் பள்ளிகளுக்குத் தாராளமாகப் பண உதவி செய்துவருகிறது. ஆசிரியர்களுக்கான சம்பளத் தொகையையும் பஞ்சப்படியையும் பள்ளிகளின் 'மெய்ன்டினன்ஸ் கிராண்டை'யும், அரசாங்கம் தாராளமாகக் கொடுத்துவருகிறது. அப்படியிருக்க ஒரு சில தனியார் பள்ளிகள் மாணவர்களிடம் சம்பளம் வாங்குகின்றன. இந்தப் பள்ளிகளை நடத்துபவர்கள் ஒரு விஷயத்தைச் சிந்தித்துப்

6th February 1959] [Vidwan T. Muthukannappan]

பார்க்கவேண்டும். 25 ஆண்டு காலமாக, ஏறத்தாழ கால் நூற்றாண்டு காலமாகத் தனியார் பள்ளியிலும் அரசாங்கப் பள்ளியிலும் கல்லூரிகளிலும் பணியாற்றி அனுபவம் பெற்றவன் என்ற முறையில், நான் தாழ்மையுடன் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பள்ளி நடத்தும் பணி மிக உயர்ந்த பணி. இதைச் செய்யும்போது பள்ளிகளை நடத்துபவர்களில் சிலர் வியாபாரம் போல் இதைச் செய்கிறார்கள். இந்தப் பணியைச் செய்பவர்களுக்குத் தியாக உணர்ச்சி வேண்டும். நான் முன்பு தெரிவித்த செய்திபற்றி இவர்கள் விருப்பு வெறுப்பில்லாமல், காய்தல் உவத்தல் இன்றி யோசித்துப் பார்க்கட்டும். தாங்களாகவே பள்ளிகளை நடத்துவதில் அவர்களுக்கு உண்மையாகவே சிக்கல்கள் இருக்குமேயானால், கனம் அமைச்சர் அவர்கள் அவைகளைக் கண்டிப்பாகத் தீர்க்க முயலுவார்கள்.

அடுத்தபடியாக, கெஜட் பதிவில்லா அலுவலர்களின் கஷ்டங்களை உணர்ந்த சர்க்கார் அவர்களுக்கு ஊதிய உயர்வு அளிக்க முன்வந்திருக்கிறது. மக்களுடைய குறைகளை உணர்ந்து, உடனுக்குடன் அவைகளை நிவர்த்திக்க வேண்டுமென்றுதான் எப்போதும் இந்த அரசாங்கம் எண்ணி வந்திருக்கிறது. நேற்று முன்னாள், கவர்னர் பெருமகனார் நிகழ்த்திய உரையில் கெஜட் பதிவில்லா அலுவலர்களுக்கும், ஊராட்சி மன்ற ஊழியர்களுக்கும் மானியம் பெறும் பள்ளிகளின் ஆசிரியர்களுக்கும் மாதம் 5 ரூபாய் ஊதிய உயர்வு அளிக்க இந்தச் சர்க்கார் முடிவு செய்திருப்பதாகக் கூறியிருப்பது உண்மையிலேயே பெரு மகிழ்ச்சிக்குரியது. தை பிறந்தது, இவர்களுக்கெல்லாம் வழி பிறந்தது. தலைக்கு 5 ரூபாய் கொடுப்பது சாதாரணமான காரியம் அல்ல. இதை நினைக்கிறபோது, எனக்கு ஒரு பாட்டு நினைவுக்கு வருகிறது. கனம் அமைச்சர்கள் நல்ல வள்ளல்கள் பரம்பரையில் வந்தவர்கள். ஆறு வெள்ளப் பெருக்கெடுத்து ஓடும்போது மக்களுக்குத் தாராளமாக உதவுகிறது. அது கோடை காலத்திலும், மேலே நீரே இல்லாமல் போய் விட்டாலும் நீரைச் சுரந்து ஊற்றின் மூலம் கொடுக்கிறது. அதைப் போல், இந்த அரசாங்கத்தார் மக்களுக்கு எப்போதும் உதவி அளிக்கிறார்கள். அரசாங்கத்திடம் இப்போது பணம் வரண்டு போயிருக்கிறதென்றாலும் கூட,

"ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும்அந் நாளும் அவ்வாறு
ஊற்றுப்பெருக்கால் உலகு ஊட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப் பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்
இல்லையென மாட்டார் இசைந்து."

என்பது போல, இந்த அரசாங்கத்தார் தங்களிடம் பண நெருக்கடி இருக்கும் போதும்கூட கஷ்டப்படும் மக்களுக்கு "இல்லை" என்று சொல்லாமல், தாராள மனப்பான்மையுடன் பணம் கொடுத்து உதவுகிறார்கள். இது மெச்சத்தக்க செயல்தான். இந்த 5 ரூபாய் ஊதிய உயர்வைப் பெறப் போகும் உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் சென்ற ஆண்டிலேயே இந்த "ஊதிய உயர்வை எதிர்பார்த்தார்கள். ஆனால், அப்போது அவர்களுக்கு இது கிடைக்கவில்லை. உடனே, 'இலவு காத்த கிளி போல' ஏமாந்து போய் விட்டோமே" என்று அவர்கள் எண்ணினார்கள். ஆனால், இப்போது அவர்களுக்கு வட்டியும் முதலும்போலக் கிடைக்கின்றது. அதாவது, சென்ற வருட டிசம்பர் மாதத்திலிருந்து இந்த ஊதிய உயர்வு அமலுக்கு வரும் என்று சொல்லப்பட்டிருப்பதால் அவர்களுக்கு 15 ரூபாய் கிடைக்கவிருக்கிறது. மாதா மாதம் 5 ரூபாய் அதிகமாகக் கிடைக்கும். இது சம்பந்தமாக ஒன்று சொல்ல விரும்புகிறேன். சம்பளம், பஞ்சப்படி என்று ஊதியத்தைப் பிரிக்காமல் படிகளையெல்லாம் சம்பளத்துடன் சேர்த்து விட வேண்டும். சம்பளத்தையும் படிகளையும் ஒன்று செய்துவிட வேண்டும். மத்திய சர்க்காரில் ஒரு சம்பளக் கமிஷன் நியமிக்கப்பட்டிருக்கிறது. ராஜ்ய சர்க்காரிலும் ஒரு சம்பளக் கமிஷன் நியமிக்கப்படும் என்று மேன்மை தங்கிய கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். அந்தக் கமிஷன் எல்லோருடைய சம்பளங்களையும் நன்றாக ஆராய்ந்து, மத்திய சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களுக்கும் ராஜ்ய சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் சம்பளங்களுக்கும் இடையே ஏற்றத்தாழ்வு இல்லாமல் ஒருங்குபடுத்தித் தக்க முறையில் ஊதியம் அளிப்பதற்கான ஆலோசனைகள் கூறும் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, கவர்னர் அவர்களுடைய உரையில் பல விஷயங்கள் குறிப்பிடப்படவில்லை. ஒவ்வொரு விஷயத்தையும் தனித்தனிக் குறிப்பிடுவது சாத்தியமில்லைதான். அவருடைய உரையில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களில், இலை மறை காய் போல பல தொக்கி நிற்கின்றன.

முக்கியமாக மீன் துறைபற்றிச் சிறிது பேச விரும்புகிறேன். மீன் துறை உண்மையிலேயே அரிய சாதனை புரிந்துவருகிறது. அந்தத் துறையைப் போற்றிப் புகழத்தான்வேண்டும். மீனவர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதி உதவிகளும் கடன் உதவிகளும் அளிக்கப்படுகின்றன. மீனவர்களுக்கு நல்ல படகுகள் தரவும் படகுத்துறைகள் கட்டவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. மீனவர்களின் குழந்தைகளுக்காகப் பல பள்ளிகளுக்கு வகை செய்யப்பட்டிருக்கின்றது. இதற்கெல்லாம் காரணகர்த்தராக இருக்கும் கனம் மீன் துறை அமைச்சர் அவர்களை உண்மையிலேயே பாராட்டுகிறேன். மீன் துறை நெறியாளர் அவர்களையும் பிற அலுவலர்களையும் பாராட்டுகிறேன்.

இறுதியாக, சுகாதாரம்பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். நம் நாட்டில் சுகாதார வசதிகள் மிகக் குறைவு. ஒரு ஊர் மூன்று மைலுக்குள் இருந்தால், இன்னொரு வைத்தியசாலையை ஏற்படுத்துவதில்லை என்ற நிலையை அரசாங்கத்தார் கைவிட வேண்டும். கிராமங்களில் மக்கள் நோய் வாய்ப்பட்டு அல்லலுறுகிறார்கள். 500 அல்லது 1,000 பேருக்கு ஒன்று வீதமாவது வைத்தியசாலைகளை ஏற்படுத்தினால்தான், மக்கள் எல்லா விதத்திலும் குறைவற்ற செல்வமாகிய நோயற்ற வாழ்வைப் பெற முடியும்.

கனம் முதல் அமைச்சர் தலைமையில் நடக்கும் அமைச்சர் குழுவைப் பற்றி எண்ணும்போது, "இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண் விடல்" என்ற குறள் என் நினைவிற்கு வருகிறது. அக்குறளுக்கிணங்க கனம் முதலமைச்சர் அந்த அந்த இலாகாக்களை அதில் அதில் திறமை மிக்க அமைச்சர்களிடம் ஒப்படைத்திருக்கிறார். கனம் முதல் அமைச்சர் தலைமையில் நடக்கும் அமைச்சர் குழுவானது மக்கள் எல்லா வகையிலும் சுபிட்சம் பெறுவதற்கு வழிவகை செய்யும் என்று எதிர்பார்க்கிறேன்.

நவ பாரத ஞாயிறு உதயமாகி ஒளி வீசத் தொடங்கிவிட்டான். அதை நாம் அனுபவித்துக்கொண்டிருக்கிறோம். பைந்தமிழ் நாடு பல வளமும் பெற்று வாழ வேண்டும், வாழும் என்று நிச்சயமாகக் கூறிக்கொண்டு மறுமுறையும் நன்றி செலுத்தி அமைகிறேன்.

"வாழிய செந்தமிழ், வாழ்க நற்றமிழர்,
வாழிய பாரத மணித் திருநாடு."

வணக்கம் (Cheers.)

SRI MOHAMED RAZA KHAN : Mr. Chairman, Sir, I move the following amendment standing in my name :—

"*Add* the following at the end :—

'but regret to note that there is no reference in the Governor's Address to the pressing problems in the State with particular reference to the soaring prices of food and other commodities and the measures to be taken in this regard '."

SRI JOHN ASIRVATHAM : I second the amendment, Sir.

MR. CHAIRMAN : Amendment moved—

"*Add* the following at the end :—

'but regret to note that there is no reference in the Governor's Address to the pressing problems in the State with particular reference to the soaring prices of food and other commodities and the measures to be taken in this regard '."

The motion and the amendment are before the House for discussion.

6th February 1959]

SRI T. P. SRINIVASAVARADAN : Mr. Chairman, Sir, I do not know whether to congratulate the Government on all their activities. Certainly, they deserve our thanks for the work they have done in certain fields. But I am afraid I cannot congratulate them as a whole.

The Governor's Address mentions specifically the famine conditions in Ramanathapuram, Tirunelveli and North Arcot districts. I wish Chingleput also were added to that list. (Sri T. Purushotham : Yes.) Recently I visited three districts—North Arcot, Ramanathapuram and Chingleput. I have not visited the other districts recently. Therefore, I cannot say much about them. But you will find very soon the Government faced with the problem of providing drinking water in Ramanathapuram. In Ramanathapuram, opposite to the bungalow wherein I was staying, there is a big tank. But there is not a drop of water in it. The crops have completely failed. We note from newspaper reports that the Collector of North Arcot has recommended remission of Rs. 10 lakhs. I am afraid the remission granted is quite insufficient. I have been told that generally agriculturists pay what is known as a compounded revenue for two harvests together, namely, one and a half times the revenue which they pay for one harvest. Now they are not going to remit the whole thing. They will remit only a part of it. What is the good of remitting a part when the whole crop has failed? It is a matter for serious consideration. As I have pointed out, in some places, especially in a part of North Arcot district there is actual famine. The Government should take steps to provide drinking water for the People as well as the cattle. It is, of course, going to be a big problem. 3-40 p.m.

In the Governor's Address you find it is stated that the crop prospects are good. But the prices of foodgrains remain high. I am unable to reconcile these two things. The crop prospects are very good but the prices remain very high. Every Minister at the Centre and in the States has been saying that these are lean months and that, therefore, prices are very high. They assure us that prices will go down. If you only look at the prices, you will be astonished. There has been bungling from top to bottom. Rice was selling at Rs. 1·06 some twelve months ago. The price rose to Rs. 1.12 a little later. It was stated that these were lean months. Then it rose further to Rs. 1.15 and again you find these were lean months. There was a slight reduction a little later and the price was Rs. 1.14. But two months ago, it rose to Rs. 1·22 and today the price is Rs. 1·21 per Madras measure. I am not quite sure whether it will rise further. Every time the fall is only a fraction but the rise is very high. Prices are going on rising and rising. And you find the Central Minister for Food, Mr. Jain, saying that everything is good and that the prices will fall. The Government here say that they have nothing to do with the food problem and that they have no control. So, there has been bungling from top to bottom. Take the price of dhall. It is Rs. 1·50 per measure now. It was sold at twelve annas and fourteen annas and the price never went beyond Rs. 1–2–0. Take any commodity

which is necessary for an ordinary family. No steps have been taken to pull down the price level. What do you find? People living here do not realise what is going on in the countryside. People are in a desperate mood. People in the lower middle class as well as those who are very poor are now in a desperate mood. In their desperation, they may do anything. They may enter the shops and plunder during day-time. If I remember aright, after the first World War, in the year 1921 or so, many young men—workers from the Choolai Mills, I believe—entered rice shops in broad daylight and plundered. I do not want to mince matters. The problem is an all-India one, it is clearly stated in the Address. That shows our Ministers are absolutely helpless. Then, what is the fun of saying that the crop prospects are good? The price level has not gone down in the last eighteen months. What is its effect on the poor children? They are underfed and under-developed. You look up to these children to man the factories you are starting now. These children are going to be workmen there. Do you realize that when they grow into men and women, they will not be able to put in their best efforts? They will have no capacity. Still you are talking of reducing the prices. There is no point in merely providing them employment. You can do that but the turnover will be a fraction of what you have at the present moment.

Reference is also made to distribution of grains through fair price shops during the lean months. Sir, some time ago, when the fair price shops were being closed, I drew the attention of the Hon. the Minister for Home to that fact and asked whether they would be opened if prices went up again. He said they would be opened if found necessary. They have not yet been opened. Have not prices gone up? When there is famine and when people are faced with the problem of ceiling, what is the fun of saying that we should redouble our efforts for stepping up production? Ceiling is a most important thing. The ruling Party may not like what I am going to say. They have committed themselves to so many theories and ideologies and I am not quite sure whether they will listen to the advice which we give. They have suggested a ceiling at Rs. 3,600 or Rs. 5,000. And these wonderful people think that they can order Lord Varuna to bless us with rain regularly. They think the rivers will always flow, the landlord will always get Rs. 3,600 or Rs. 5,000 and they can put a ceiling at that level. Sir, we have had famines for a number of years consecutively. In North Arcot district, for five years consecutively, there was not a drop of water in the river Palar. Even springs dried up. If anybody knows an iota of agricultural economy, he will certainly not recommend this kind of ceiling. One year, you get something. Next year, there is famine. In the subsequent year, there is famine and his earning in the first year has to be spent over the lean years. Can you get the same income from all lands? It may be all right in the case of a land which is fed by an ever-flowing river. But lands which look up for rain do not bring in anything. I say, this ceiling is bad. I tell you to-day you have brought

6th February 1959] [Sri T. P. Srinivasavaradan]

about economic imbalance in the field of agriculture. There is confusion and the result will be that there is no production. No landlord is interested in this. (Sri A. M. Allapichai : Why?) He knows how much he will get. If the Government will guarantee him an income of Rs. 3,600, then they can put a ceiling. Are they prepared to do it? They are not prepared to grant even remission which is only partial, and not full. You have done something to ensure fixity of tenure and fair rent for the tiller. It is good. Why not you wait for some time? Having given the tiller his share, why do you not allow the arrangement to work for ten more years? You say production has increased. I believe it has decreased. The landlord is not interested in increasing the production. He thinks 'Anyway, we will get only 33-1/3rd or 40 per cent of the produce. Why should we work and produce more when our share is only this?'. Sir, where you have sensible landlords and sensible tenants, the percentage is still 50 : 50, though it is permitted to be 60 : 40. Many of us know that villages are depopulated. One reason is your change in the land policy. The villagers come away to towns if you start a new industry or set up new factories. They know they have to depend upon monsoons and if rains fail, agriculture will not pay. In the case of factories, they know they can get ready wages week after week. Big villages have now become towns. In Madras the population has increased because everybody knows that if he goes to Madras, he can be sure of his income. The villagers have given up tilling and you say production has increased. I am not prepared to accept the statement. You have depleted the villages of the people and that is the reason why production is going down. There is no point in talking about villages in Tanjore which are fed by the Cauvery and the villages fed by the Tambaraparani. There are a number of places which look up for rains and you have to consider whether production can be increased in those places.

Then, Sir, I come to co-operative farming. This is a new 3-50 p.m.
experiment. We have been told that whenever there is a new experiment, it should be confined to a few places and that then we should find out what the results are. Now, the resolution passed by the ruling Party is that it is going to be a widespread one. One important Member of that Party says, 'We will fix the ceiling and whatever remains, we will distribute it to the landless and make them owners.' Another Member says, 'No, no, that is not our intention. The balance will be taken over for co-operative farming and not given to the landless and they made owners.' Who is going to be the owner we do not know, because they are changing or shifting ground. We have waited and waited but how long are we to wait? The point is we do not do anything at all.

THE HON. SRI R. VENKATARAMAN : I thought the hon. Member did not want anything to be done . . .

SRI T. P. SRINIVASAVARADAN : I am not saying that anything should not be done. But the Government should not have this experiment on a wide scale.

[Sri T. P. Srinivasavaradan] [6th February 1959

Take, for example, a doctor who has earned Rs. 1 lakh. He goes to a village and purchases lands with his hard-earned money, thinking that he would get something in return and that there would be no ceiling. Now, if we fix a ceiling, what will happen to him? (An hon. Member: Compensation.) What compensation will he get? He will get only a small amount. The Government have already fixed the ratio of 60 : 40 in regard to the share of the produce. But so far as the urban income is concerned, there is no definite answer and there is only an implied evasive answer.

Then, I come to difficulties in respect of administrative personnel. There is a lot of inefficiency in the administrative personnel. In the case of clerks, that is due entirely to frustration. To some extent, it is due to the standard of recruitment prescribed by the Government. The standard of recruitment has gone down. There is no doubt about it. They are very sincere people but there is this frustration due to the high cost of living and the inadequate emoluments they receive. I am coming to the interim relief of Rs. 5 which is a negligible sum. The cost of living has risen by Rs. 10 or Rs. 15. If this enhanced dearness allowance meets the cost of living, then it is all right but it is not the case. There is this vicious circle. The moment the Governor has announced that the Government are going to give Rs. 5 as interim relief, the prices of foodstuffs have risen. Even the rent has risen. In this connection, I must bring to the notice of the Government that they have been partial towards industrial labour but not towards their own servants. Whenever the cost of living increases, the Government ask the industrial employers to increase the dearness allowance. They compel them to increase it by saying that the cost of living has increased by ten points. But what have they done in the case of their own servants? They have one yardstick for industrial employees and another for their own servants. So, the frustration of the Government servants is legitimate. There is also difference in the scales of pay. They are getting a lower scale but the Central Government servants are getting a higher scale. One of my hon. Friends at Coimbatore told me that as soon as the bonus was given to the workers, the price of cloth in the shop had risen suddenly from Rs. 1–8–0 to Rs. 2. The rise in the price is maintained for a number of months and it does not come down. So, there is this economic inequilibrium created by the Government.

Sri A. M. ALLAPICHAI : Is that created by the Government or by the merchants?

Sri T. P. SRINIVASAVARADAN : It is created by the Government and not by the merchants.

What about the poor agriculturists? They cannot afford to pay such a heavy price. They suffer like anything.

Sir, then I come to the subject which is dealt with by the Hon. the Minister for Electricity. It has been pointed out to him that the surcharge levied on the consumption of electricity during the

war-time still continues and that it must be discontinued. I would certainly request him to consider it in view of the fact that hereafter there will be no cut in the supply of electricity.

THE HON. SRI V. RAMAIAH : Still we would not have self-sufficiency.

SRI T. P. SRINIVASAVARADAN : Then he should consider at least a partial cut in the surcharge.

Then, I come to the policy of the Government with regard to elementary schools. Very recently they issued a Government Order outlining the policy. It is the correct policy. If the elementary schools collect fees from the boys, the Government would not pay anything and if they do not collect them, the Government would pay. It is also a correct policy to give free education up to the Fifth Standard. Unfortunately, what happens? I shall give an example. Suppose an institution collects Rs. 1,000. Teachers get the minimum salaries given by the Government. In the case of the higher grade teacher, it is Rs. 35 and it is Rs. 45 in the case of the secondary grade teacher. But the management gives an increase of Rs. 12 in the case of the higher grade teacher and Rs. 20 in the case of the secondary grade teacher. If they want to pay higher salaries to their teachers which they are getting now, they would unfortunately have to raise the fees to Rs. 5 or Rs. 6. But the parents would not be willing to pay more. Whatever the Government might do, they should see that no teacher is sent out and that there is no cut in his present salary. Let them open Corporation or Municipal or Board schools and let all the teachers be absorbed.

Then, we find that there is too heavy work for the present Director of Public Instruction. I would humbly suggest that there should be a Director for Elementary Education, another Director for Secondary Education and yet another Director for University Education. My hon. Friend Sri Purushotham also referred to it last time and I am now harping upon it. It is absolutely essential that there should be a Director for University Education. The number of schools is growing. The number of colleges is growing and it is not possible for one Director to attend to all these items of work. Another point is that there should be decentralization in the Education Department. Even for putting up a building costing Rs. 3,000 or Rs. 4,000, we have to go to the Divisional Inspector and get his sanction. Certain powers should be delegated to the District Educational Officers and certain other powers to the Divisional Inspectors. Then only things will move very quickly.

Sir, I am really glad that the Government are appointing a Pay Commission and I hope that that Commission will give a hearing to what the recognized associations of public servants including the employees of local bodies and school teachers have got to say. The main term of reference should be that disparities in scales of pay should go and that there should be uniform scales of allowance.

[Sri T. P. Srinivasavaradan] [6th February 1959

There should not be one scale for the Secretariat and another for
4 p.m. the Board Office. Otherwise, there will be discontent and dissatisfaction among the various employees.

I have nothing more to say except that in the matter of food, the Government have bungled and bungled. The poor people are in a desperate mood. The middle class people are suffering. Even teachers getting Rs. 100 and Rs. 120 (secondary grade teachers) are not able to make both ends meet. They go even without a meal. They take only kanji once and that is because they are not able to take an additional meal. That is the present position. Your five rupees is nothing to them; it may cost you one crore, taking into account all the Non-Gazetted Officers. But so far as the teachers are concerned, I know it comes to Rs. 60 lakhs. There are a lakh of elementary school teachers and at Rs. 5 a month, it comes to Rs. 5 lakhs and for a year it is Rs. 60 lakhs. But what is the good? You have not tried to measure their difficulties in terms of prices of foodgrains. By the time you give this, the food prices have increased. What does this allowance mean now? Please concentrate your attention on solving this food problem and if you do that, the other problems would solve by themselves. The other problems can remain till you solve the food problem. That is my humble opinion.

* DR. T. V. SIVANANDAM: Mr. Chairman, Sir, I would like to associate myself with my hon. Colleague in thanking the Governor for the Address delivered to us on the 4th February 1959. Just now my hon. Friend was strongly criticising about the high prices of foodgrains. It has been very clearly noted that food production has increased. Though food production has increased, still the prices are soaring high. Only recently/only yesterday I heard—that the prices of foodgrains in the mofussil were of late coming down. That being the case, it is a surprise to me to hear that the food prices are going up in the City. Therefore, we must find out why, in spite of the increase in the production of foodgrains, the price is going up. There are several reasons for it. One is that there is export of foodgrains to the neighbouring States, deficit States from other districts. The Government should see that this kind of export is stopped. Because more and more foodgrains are being moved to deficit areas, the merchants here begin to do profit-making business and more people suffer on account of shortage of foodgrains. If these foodgrains which are going to deficit areas are kept within our State, then the prices of foodgrains will go down. Secondly, there is hoarding of foodgrains by the millers and other very rich people. Government have come down to say that nobody should hoard foodgrains exceeding 15 maunds. That is a good step to stop hoarding. With the stoppage of hoarding, naturally foodgrains will become available in the open market, and consequently prices will come down. Thirdly, there is over-population and over-population means more food is required. Over-population is due to two factors. One factor is the increase in human specie and the other factor is the influx of people from the neighbouring States. So far as the human specie is concerned,

6th February 1959] [Dr. T. V. Sivanandam]

the Government are taking steps for family limitation. We know it perfectly well and people are showing interest in those schemes. With regard to influx of people from other States into our State, it has a direct effect on the rise in the prices of foodgrains and that has to be stopped. I think these are things which we have to tackle. Unless we tackle these things, I do not think the prices of foodgrains will come down considerably. Or, in the alternative, taking into consideration the influx of people from neighbouring States and also the increase in human specie, the production of foodgrains by agriculturists should be trebled or increased four times or five times if necessary.

In this connection, I must say that the agriculturists are very poor people, with small land holdings. Therefore, we have got to help the agriculturists to see that their production increases. For that, we have got to give loans to poor and middle-class agriculturists through co-operative banks, as liberally as possible. Not only that. The most important thing to increase food production is supplying of scientific fertilisers. We can see that it is very difficult to get scientific fertilisers, because even the private sector has been allowed to do that trade. If the supply of fertilisers is made only to co-operative institutions and if the co-operative institutions supply the scientific fertilisers to the agriculturists at a time when they really need them, it will be helpful. But now it so happens that the agriculturists are not able to get these fertilisers at the proper time. This will have to be rectified. Another thing is that these agriculturists should be helped in marketing their produce and it should be done properly. If we do all these things, then comes another thing which is not in our power to regulate and that is Nature. Nature is not kind always. Of course, if Nature fails, there will not be any production even though we may be liberal in giving financial aid to the agriculturists. But while granting loans, it should be seen that no loss is incurred. Government must also come forward to subsidise the financing banks if the bank incurs loss in financing agricultural production.

It has also been decided by the State to take over wholesale trade in foodgrains. I have got my own doubts—I may be wrong and I speak subject to correction—whether this kind of trading by Government will be successful. Government will be all right for administrative purposes, or for formulating laws or rules or policies. But trading is different and only business people have a knack for it. If Government should take up this trade, I have got my own doubts whether they will be successful in entering into this matter. But the thing is they are going to get foodgrains from the merchants and the millers and they are going to sell them through co-operative institutions. It is a welcome idea. Anyhow, the Government have got to be very careful in taking up this kind of trade.

All efforts should be made to step up food production through co-operative institutions. In order to solve the socio-economic problem of our country and to establish a socialistic pattern of society,

